உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

---

திருவா வடுதுறை ஆதீனத்துத்
திராவிட மாபாஷிய கர்த்தராகிய
சிவஞான சுவாமிகள்
இயற்றியருளிய

# கம்பராமாயண முதற் செய்யுட்

# சங்கோத்தர விருத்தி

IMS0292



திருநெல்வேலித்
தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக்
கழகம் லிமிட்டெட்.

துன்மதிஞ கார்த்திகைமீ

1922

ஓம்:

# முகவுரை.

ஸ்ரீமத். சிவஞான சுவாமிகள் காஞ்சீபுரத்தில் வதிந்தருளியபோது அந் நகரத்து வைணவர் சிலர் கம்பரையும் அவர் கவித் திறத்தையும், பலவாறு புகழ்ந்து பேசித் தமிழ்மொழிக்கண் கம்பராமாயணத்தைப் போல்வதொரு காவியம் வேறின்றெனத் தருக்கிக் கூற, சுவாமிகள் அவர்கள் வாயை அடக்கக் கருதிக் கம்பராமாயணத்து முதற் செய்யுளாகிய

"நாடிய பொருள்கை கூடு ஞானமும் புகழுமுண்டாம்
வீடியல் வழிய தாக்கும் வேரியங் கமலை நோக்கு
நீடிய வரக்கர் சேனை நீறுபட்டொழிய வாகை
சூடிய சிலையி ராமன் றோள்வலி கூறுவோர்க்கே"

என்பதற்கு நியாய வாயிலாகப் பல குற்றங்களைக் கற்பித்தனர். அவ் வைணவர்கள் அவற்று ளொன்றற்கேனும் விடை கூற வியலாமல் வருந்திச் சுவாமிகளிடத்துச் சென்று தெரியாது பிதற்றினேம் எனச் சொல்லி வணங்கித் துதிக்க, அக்குற்றங்கள் யாவற்றிற்கும் சுவாமிகள் தாமே விடை கூறினரென்ப. அத்தடை விடைகளை யாவரு முணரவேண்டு மென்ற விருப்பால், காஞ்சி நகரவாசிகளாகிய சைவர்கள் அவற்றை எழுதித் தருமாறு சுவாமிகளை வேண்டச், சுவாமிகள் அவற்றை ஒரு சிறு நூலாக எழுதிக்

"கம்பராமாயண முதற் செய்யுட் சங்கோத்தர விருத்தி" எனப் பெயரிட்டுக் கொடுத்தனர். இவ்வரிய நூல் இப்போது கிடைத்தற் கருமையா யிருப்பதால், இதனை ஒருவாறு பரிசோதித்து அச்சிட்டனம். பிழையுளதாயின் அறிஞர் கருணை கூர்ந்து தெரிவிப்பாராக.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

---

கம்பராமாயண முதற்செய்யுட்

# சங்கோத்தர விருத்தி.

## நூற்பயன்.

நாடிய பொருள்கை கூடு ஞானமும் புகழு முண்
[டாம்
வீடுயர் வழிய தாக்கும் வேரியங் கமலை நோக்கு
நீடிய வரக்கர் சேனை நீறுபட் டொழிய வாகை
சூடிய சிலையி ராமன் றோள்வலி கூறுவோர்க்கே.

இதனுட் சங்கையு முத்தரமும் வருமாறு:—

சங்கை சிறிது காட்டுதும்.

நாடிய பொருளெனவே யெல்லா மடங்குதலின், ஞானமும் புகழுமுண்டா மெனவும், வீடுயர் வழியதாக்கு மெனவும், வேரியங் கமலைநோக்கு மெனவுங் கூறுதல், கூறியது கூறலே யாம்.

இனி, ஈண்டுக் கூறிய நாடிய பொருண்முதலாய வற்றைத் தரும் இராமனை, அவை தருதற்குரிய சத்

துவகுணத் தொழிலான் விசேடித்துக் கூறுதா, "நீடிய வரக்கர் சேனை நீறுபட்டொழிய வாகை சூடிய சிலையிராம" னென வுருத்திரச்சுவைதோன்ற வேனைக் குணத் தொழிலான் விசேடித்துக் கூறுதல் சிறிதுஞ் சிறப்பின்றாம். இன்னுஞ் சொற்றொறுஞ் சிறிது சங்கை காட்டுதும்.

* "நாடென்ப நாடா வளத்தன நாடல்ல
நாட வளந்தரு நாடு"

என்பவாகலிற் றேடி வருந்தாது பெறப் பொருள் கைகூடிடச் செய்தலே செய்தலாம்; அவ்வாறன்றித் தேடிப் பெறப் பொருள் கைகூடிடச் செய்தல் செய்யாமையோ டொக்குமாதலின், நாடாப்பொருள் கைகூடுமென்னாது நாடிய பொருளென்றல் சிறப்பிலதாம்.

பொருள்கள் பலவாதலிற் பன்மைப்பாலாற் கூறாது பொருளென்றல் வழுவாம்.

கூடுமெனவே யமைந்திருப்பக் 'கைகூடு' மென்றல் வேண்டா கூறலாம்.

இல்லறந்துறவறம், இம்மைமறுமை, போகமோக்க மென்றாற்போலப் புகழ் முற்கூறி ஞானத்தைப் பிற்கூறன் மரபாம்; அவ்வாறன்றி ஞானமும் புகழுமென்றன் முறைபிறழ வைத்ததாம்.

ஞானமும் புகழு முளவெனப் பன்மையாற் கூறாது ஞானமும் புகழு மென்னு மிரண்டெழு

* திருக்குறள்.

வாய்க்கு உண்டு என வொருமைப்பாலாற் கூறியது வழுவாம்.

உண்டு எனவே யமைந்திருப்ப ஆம் என்பது நின்று பயனின்மையாம்.

வீடென் றொழியாது 'உயர்வழிய' தென்றன் மிகைபடக் கூறலாம்.

அன்றியும் வீடாகிய வுயர்வழியதென விரு பெயரொட்டுப் பண்புத் தொகையாகக் கொள்ளின், எற்றிடபம், யாட்டே றென்றாற்போல வீட்டுயர் வழியதெனச் செய்கைப்பட்டுப் புணர்வதல்லது வீடு யர் வழியதெனப் புணராதாம்.

கைகூடும், உண்டாம், நோக்கு மென்பனவற் றைத் தன்வினையாகக் கூறி யாக்குமென விஃதொன் றனையும் பிறவினையாகக் கூறல் வழுவாம்.

வேரியில்லாத கமலஞ் சிலவுளவாயின் அவற்றை நீக்குதற்கு வேரியங் கமலமென விசேடித்தலமையும், அவ்வாறின்மையின் வேரியங்கமல மெனப் பயனில் விசேடமடுத்தல் வழுவாம்.

கமலே குடிகொண் டுறையுமென்னுது கடைக் கண்ணுற் சிறிது பார்க்கு மென்பதுபட நோக்கு மென்றமையால் அற்பச் செல்வ மெய்து மெனப் பொருடருதலிற் சிறப்பிலதாம்.

நிலைபேறின்றி யழிவுறு மாக்களை நீடியவரக்க ரென்றல் பொருந்தாதாம்.

அரக்க ரெனவே யமைந்திருப்பச் சேனை யென் றன் மிகையாம்.

அன்றியு மாக்காது சேனை நீறுபட்டொழிந்த தன்றி யாக்கர் நீறுபட்டில ரெனவும் பொருடரு தலின் மயங்கவைத்தலாம்.

நீறுபட வென்னுது நீறுபட்டொழிய வென்றன் மிகையாம்.

நீறுபட் டொழிந்தபின் வாகைசூடுதலை யொழிய வாகை சூடலென்றல் வழூவாம்.

பிரமாத்திர முதலிய வேனைப் படைகளு மிருப் பச் "சிலை யிராம" னென வொன்றனையே கூற லமையாதாம்.

இராமனுக் கனந்த நற்குணங்க ளிருப்பத் தோள்வலியாகிய வோரேகதேச மாத்திரையே கூறல் சிறந்ததன்றும்.

மன மொழி மெய்களென்னு முப்பொறியு ளேனையவற்றை யொழித்துக் கூறுவோர்க்கென வொன்றன் வினை மாத்திரையே கூறல் சிறப்பிலதாம்.

இன்னு முதற்பாட்டி னீறுபட் டொழியவென அமங்கலச் சொல்லை வைத்தலும் வழூவாம்.

ஆதலி னிப்பாட்டு முழுதுங் குற்றமே யாமெ னின் ? அற்றன்று.

இனிச் சங்கைதீரப் பொருள் சிறிது காட்டுதும்.

ஒருபொருளி னுட்டமுற் றிருப்போர்க்கு அக் காலத்து வேறோர் பொருள் கைகூடி னப்பொருளி லவர்க்கு விருப்பஞ் செல்லாதாம்; அந் நாடிய பொருள் கைகூடின் மகிழ்ச்சி மேன்மே லுண்டா மாகலின், அவ்வாறு மகிழ்ச்சி யுண்டாம்படி நாடிய

பொருளே யெளிதிற் கிடைக்கு மென்பார் நாடிய பொருள் கைகூடுமென்றார்.

* " வேண்டுவார் வேண்டியதே யீவான் கண்டாய்"
* " மனத்திருந்தக் கருத்தறிந்து முடிப்பாய் நீயே"
† " எண்ணிய வெண்ணியாங் கெய்துப "
† " உள்ளிய தெல்லா முடனெய்தும் "

என்பனவெல்லா மிக்கருத்தே பற்றி வந்தனவென்க.

நாடா வளத்தன வென்றது, நாடிவருத்தமுறு தெளிதினெய்தும் வளத்தினை யுடையன வென்பதே யாம். அது பரிமேலழக ருரையானு முணர்க.

நேடியபொருள் தேடியபொருளெனினு மமையு மேனும், வேதத்தினுஞ் சிறந்தது காயத்திரி, அதனினுஞ் சிறந்த தெட்டழுத்தாதலின், அவ்வெட் டெழுத்துட் சிறந்த நாராயண னென்னும் பெயரின் முதலெழுத்தை முதற்க ணெடுத்து நீர் நாடிய பொருளென்றார்.

இனி நாடிய பொருண் மக்கட்குறுதி பயப் பன விவை யெனச் சான்றோரா னாய்ந் தோதப் பட்ட பொருளெனினு மமையும். ஈண்டு நாடுதல் ஆராய்தல். அது †" நாடாது நட்டலிற் கேடில்லை " என்பதனானு முணர்க.

இனி இவ்வாறன்றி "உண்ணிய புகிலிவை யொன்று மில்லையாம்" என்புழிப் போல நாடிய வென்பதனைச் செய்யிய வென்னும் வினையெச்ச மாக்

---

* திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரம்.

† திருக்குறள்.

இக், கூறுவோரைப் பிறரெல்லா நாடும்படியாகவவர்க் குப் பொருள் கைகூடலு மென்றலு மொன்று.

இன்னும், நாடியாவது நரம்பு, அஃதாகுபெய ரான் நரப்புக் கருவியாகிய யாழினை யுணர்த்தும். உணர்த்தவே, நாடியின்பொரு ளுடிக் கண்ணவாகிய விசைப் பொருளாம். இசை யொன்றாயினுங் குரல், விளரி, உழை முதலிய பேதத்தாற் பலவாதல் பற்றி நாடியவெனப் பன்மையாற் கூறப்பட்டது.

கையாவதொழுக்கம், எனவே இசைப்பொருளு மொழுக்கமுங் கூடுமெனப் பொருள் கோடலுமாம். இவைபோல்வன வெல்லாஞ் சிறந்த பொருளல்ல வென்க.

பொருளென்பது அஃறிணை யியற்பெயரா யிரு பாற்கும் பொதுவாய் நிற்றலின், ஈண்டுப் பன்மைக் கண் வந்தது. "பொருளாதி யறுவகைப் பொரு" ளெனவும், "நாற்பொருட் பய" னெனவும், "பொருளீந்தையு" மெனவும், "சொல்லினதுபொரு" ளெனவும் கூறப்படுவன வெல்லாம் பொருளேயாமே னும், ஈண்டுப் பொருளென்றது நாடிய வென்றதனாற் கல்விப்பொருளுஞ் செல்வப்பொருளுமே யெனக் கொள்க.

"இருவகைப்பொருள் கல்விப்பொருள் செல் வப்பொருள்" என்றார் திவாகரனார்.

"நற்பொருள் செய்வார்க்கிடம் பொருள் செய் வார்க்கு மஃதிடம்" என்றார் சிந்தாமணியார்.

பிறரு மிவ்வாறே கூறுவன காண்க. தலைமை பற்றிக் கல்விப்பொருண் முற்கூறிச் செல்வப் பொருள் பிற்கூறப்பட்டது.

இனிக்,

" கலந்தாரைக் கைவிடுதல் "
" ஞாலங்கருதினுங் கைகூடும் "
" நூல்கால் யாத்த மாலைவெண்குடை "
" செயிரிற் றலைப்பிரிந்த காட்சியார் "
" கொலைமேற்கொண்டாரிற் கொடிதே "

என்புழிக் கை, கால், தலை, மேல் என்றாற்போல்வன இடைச் சொற்களாய்த் தாஞ்சேர்ந்த வினையைச் சிறப்பித்துப் பொருட் குபகாரப்பட்டுவரும். இவ் வாறு வருவனவற்றை வடநூலா ருபசர்க்க மென்பர். அவ்வுபசர்க்கந்தான்,

" மருந்து கைகண்டென "
" இருள்கால் சிக்கும் "

எனச் சில விடத்துப் பகுதிப் பொருளையே சிறப்பித்தும்,

" விருந்து புறந்தருதல் "
" காரி கைதொடினும் "

எனச் சிலவிடத்துப் பகுதிப்பொருளை வேறுபடுத்தும் நிற்கும். ஈண்டுக் கையென்றதூஉ மவ்வா றிடைச் சொல்லாய்க் கூடுதலைச் சிறப்பித் தெளிதிற் கூடு மென்னும் பொருள்பட நின்றது.

இனி இவ்விருவகைப் பொருளின் பயன் கூறு கின்றார்.

ஞானமும் புகழுமெனக் கல்விப்பொருட்குப் பயன் ஞானம், செல்வப்பொருட்குப் பயன் புகழ், அவ்விரண்டுங் கைகூடிடப் பெற்றார்க் கிவ்விரண்டு

முளவா மென்பதாயிற்று. தலைமைபற்றிக் கல்விப் பொருளை முற்கூறிச் செல்வப்பொருளைப் பிற்கூறு தன் மரபாமாகலின், அவற்றின் பயனாகிய ஞானம் புகழ்களையு மம்முறையே வைத்தார்.

ஞானமாவது வீடுபயக்கும் அறிவு. ஏனையறிவு விஞ்ஞான மெனப்படும். இவ்வாறு வடமொழியுட் கூறப்பட்டது.

புகழாவது தாமிறந்துழியுந் தாநிகழ்த்தியவா றுலக முயர்த்துக் கூற நிலைபெறுவது.

*"நத்தம்போற் கேடு முளதாகுஞ் சாக்காடும்
வித்தகர்க் கல்லா லரிது"

என்புழிப்போல வுண்டென்பதனைத் தனித்தனிக் கூட்டிமுடிக்க.

† "வேறில்லை யுண்டைம்பான் மூவிடத்தன"
என்பதனால், உண்டென்பது பன்மைக்கும் பொது வாமாலோ வெனின், அஃதீண்டைக் கேலா தென்க. அம்முறை யிங்ஙனம் விரிக்கிற் பெருகும்.

கைகூடுதலானென வெடுத்து முடிக்க.

முடிக்கவே,

‡" செயற்கைப்பொருளை யாக்கமொடு கூறல்"
§"ஆக்கந்தானே காரணமுதற்றே"

என்னும் விதிபெற் றுண்டாமென வாக்கமொடு கூறப் பட்டுக் காரண முதற்றாய் வந்தவாறு காண்க.

---

* திருக்குறள். † நன்னூல்.

‡ தொல்—சொல் 20. § தொல்—சொல் 21.

இனி அந்த ஞானத்தின் பயனும் புகழின் பயனுங் கூறுகின்றார்.

"வீடு உயர்வழிய தாக்கும் வேரியங் கமலை நோக்கும்" என வீடும் உயர்வழியதும் எனப் பிரித்தெண்ணுக.

வீடாவது சுட்டறுத்தல், உயர்வழியதாவது விரசை நதியினைக் கடந்துசெல்லு முயர்ந்தவழியினையுடைத்தாகி நிற்பதொரு பாமபதம். எனவே முத்தியிருவகைத் தென்பதாயிற்று.

வீடு தொழிற் பெயர்.

உயர்வழியது வினைக்குறிப்பு முற்றுப் பெயர்ப் பகுபதம்.

இவ்விரண்டும் ஞானத்தாலும் பயனெனப் பின்னெதுகைத்தொடைப்பட 'ஆக்கும்' 'நோக்கும்' எனக் கூறினாராகலின்,

* "நட்பாட றேற்றாதவர்"

† "தேற்றாவொழுக்கம்"

என்புழிப்போல, வீண்டு பொருட்கேற்ப ஆக்கும் என்பதனை யாகுமெனத் தன்வினையாகவே கொள்க.

வடநூலாரு மிவ்வாறு தன்வினையைப் பிறவினையாகவும், பிறவினையைத் தன்வினையாகவு மிடங்கண்டு பொருள் கூறுப.

அற்றேல், கைகூடும் உண்டாம் நோக்கும் என்பனவற்றையே 'ஆக்கும்' என்பதற் கேற்ப,

---

* திருக்குறள் † நாலடியார்.

பிறவினையாகக் கொள்ளாமோவெனிற் கொள்ளாம். என்னை? அவை யெளிதி னெய்து மென்பது படத் தன்வினையாகவே கூறவேண்டுதலின். அன்றியும் அம்மூன்றுந் தன்வினையா யிஃதொன்று மாத்திரையே வேறுபட்டு நிற்றலின் அம்மூன்றற் கேற்ப விதற்கும் பொருள்கோடன் மரபாமல்ல திவ்வொன் றற்கேற்ப வம்மூன்றற்கும் பொருள்கோடன் மர பன்றுமாகலானும், முன்னும் பின்னுங் கூறிய வினை கட்கேற்ப விடைநின்றதற்கும் பொருள் கோடலே மரபாமாகலானும் இதனையே யவ்வாறு கூறுக வென்பது.

இனி, நாடிய பொருண் முதலியன வீண்டுக் கூறிய காரணங்களானன்றிப் பிற காரணங்களானு மெய்து மேனும் 'வீடுயர் வழியது' ஞானமொன்று னல்ல தெய்தாமையி னவ்வுண்மை தோன்ற விதனை வேறு பிரித்து 'ஆக்கும்' என ஞானத்தினை வினை முதலாக்கிக் கூறினா ரென்றலு மொன்று.

திருமகள் வைகுதற் கிடமாகப் பெற்ற கமலம் தேன் பெருக்கெடுப்ப வான்ற பொழுகின் வளமிகப் படைத்தவாறு போல வவளா னோக்கப்பட்டோரு மவ்வாறு பெருவளம் பெற்றுத் திருவொடும் வாழ்வ ரென வுள்ளுறை யுவமமாய்ப் பொருட் குபகாரப் படுமா றியைபின்மைநீக்கிய விசேடணங்கொடுத்து 'வேரியங்கமலை' என்றார். நோக்குதல், அப்புக முடையார்மாட்டுச் சேறற்கு அவாது செவ்வி நோக்கி நிற்றல்.

"கதங்காத்துக் கற்றடங்க லாற்றுவான் செவ்வி
யறம்பார்க்கு மாற்றி னுழைந்து"

என்றூர் தெய்வப்புலமைத் திருவள்ளுவ நாயனரு மென்க. எனவே, யத்துணைப் பெருஞ்செல்வ மெய் துவரென்றது பெறப்பட்டது.

நோக்குமென்றது துபசாரம்.

ஞானத்திற்குப் பயன் வீடுபேறும், புகழிற்குப் பயன் செல்வமு மென்பதாயிற்று. ஆகவே தோள் வலி கூறுவோர் கல்விப்பொருளான் ஞானமெய்திப் பிறவிநீங்கி வீடுபேறடைவர்; செல்வப்பொருளா னீகை முதலிய வறஞ்செய்து புகழெய்தி மறுபிறவி யினுஞ் செல்வத்தை யடைவரென்பது பெறப் பட்டது.

இவை யிம்முறையே யொன்றற்கொன்று பய ஞதல்,

*" கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்றீண்டு வாரா நெறி" ;—என்பதனுலும்

*" ஈவார் மேனிற்கும் புகழ்"

†" புலவர் பாடும் புகழுடையோர் விசும்பின்
வலவனேவா வானவூர்தி யெய்துப"

என்பவற்ருனு முணர்க.

*" கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்றீண்டு வாரா நெறி"

என்புழிக் கற்ற காரணத்தான் மெய்ப்பொருள் காண்டலும் காண்டற் காரணத்தால் வாராநெறி தலைப்படுதலும் விளங்கியவாறு காண்க.

---

* திருக்குறள் † புறப்பாட்டு.

அற்றேல், கூறுவோர் வீடுபேறுஞ் செல்வமு மெய்துவரேனின், அவ்விரண்டு மொன்றற்கொன்று மறுதலைப் பொருளாகலி னவை யொருங்கெய்துத லெவ்வாறெனின்? அற்றன்று; நாடிய வென்றதனு லவர் வேட்டது வருமெனப் பொருள் கொள்க.

அற்றே லஃதாகுக. இதனாற் போந்தது தோள் வலி கூறுவோர்க்கு அக்கூற்றுப் பொருளும் வீடும் பயக்குமென்பதாயிற்று. ஆகவே மக்கட் குறுதிப் பயனெனக் கூறப்படும் அறம் பொரு ளின்பம் வீடென்னு நான்கனு ளேனை யறமு மின்பமும் பய வார்போலு மெனின்?
அற்றன்று;

* "ஒண்பொருள் காழ்ப்ப வியற்றியார்க்
[கெண்பொரு
ளேனை யிரண்டு மொருங்கு"

† "வடுவிலா வையத்து மன்னிய மூன்றி
னடு வண தெய்தி னிருதலையு மெய்தும்"

என்பவற்றுற் பொருள் பயத்தல் கூறவே யேனை யறமு மின்பமும் பயத்தல் கூறுமையே பெறப்பட்டது. படவே கூறுவோர்க்கு நாற்பொருட் பயனு மெய்து மென்பது பெறப்பட்டவா றறிக.

இனி, இவ்வாறன்றி நாடிய பொருள் என்றது காமம், ஞானமும் புகழு மென்ற திருவகை யறம், வீடுயர்வழியதென்றது வீடுபேறு, வேரியங் கமலை யென்றது பொருளெனக் கொண்டு, கூறுவோர்க்

---

* திருக்குறள். † நாலடியார்.

கிந்நால்வகைப் பொருளுமென விவ்வாறு கோடலு மொன்று.

நாடிய பொருள் என்றது காம மாயவாறென்னை யெனின்? நாடியென்ப தாகுபெயரான் யாழினை யுணர்த்தி, இருமடியாகுபெயரா னவ்வியாழினை யுடைய கந்திருவரை யுணர்த்திற்று. யாழினையுடை யார் பிறருமுளரேனுந் தலைமைபற்றிக் கந்திருவரையே யுணர்த்தல் * "யாழுடையார் மணங் காண்" †"மெய்க்கிளையாழோர்" என்பவற்றா னறிக.

‡ "தள்ளா விளையுளுந் தக்காருந் தாழ்விலாச்
செல்வருஞ் சேர்வது நாடு"

என்புழி விளையு ளென்பதாகு பெயரா னுழவர்மே னின்ற தென்றூர் பரிமேலழகரும். ஆதலி னாடி யென்ப தவ்வா ருகுபெயராதற் கேற்குமா றறிக.

நாடியென்ப தாகுபெயராற் கந்திருவரை யுணர்த்தவே நாடியவென்பது அஃறிணைப் பன்மை வினைக்குறிப்பு முற்றுப் பெயராய்க் கந்திருவருடை யனவாகிய பொருளெனப்பட்டது. அப்பொருளாவ தன்புடைக் காமம். அது வகையா னைந்திணையாதலி னாடியவெனப் பன்மையாற் கூறப்பட்டது.

இனி, நாடி யென்பதனை யாழாகவே வைத் ததனை யுடைய பொருளாகிய கந்திருவத் தெய்வ மெனக்கொண்டு, கையென்பதனை யொழுக்கமெனக் கொண்டு, கந்திருவத் தெய்வத்தின தொழுக்கமாகிய வன்புடைக் காமமெனினுமாம். காமப்பொருட்

* திருக்கோவையார், செ—7. † நம்பியகப்பொருள். அகம்—28. ‡ திருக்குறள்.

குரிய பிரமந் தெய்வ முதலிய பிற மணமு முள வேனுந் தலைமைபற்றிக் கந்திருவ மணங்கூறவே யவையு மடங்கும்.

இனி, ஞானமும் புகழு மறமாயவா றென்னை யெனின்? துறவறத்தின் பயன் ஞானம், இல்லறத் தின் பயன் புகழ்; அவை யாகுபெயராற் றத்தங் காரணங்களாகிய வவ்வறங்களை யுணர்த்தி நின்ற வென்பது.

அற்றேல் அஃதாக. அறம் பொரு ளின்பம் வீடென விம்முறை வையாது, காமம் அறம் வீடு பொருள் என விவ்வாறு முறைபிறழ வைத்த தென் னையோ வெனின்?

* " படைகுடி கூழமைச்சு நட்பா ணாறு
முடையா னரசரு ளேறு "

என்புழிப் போலச் செய்யு ளோக்கி முறை பிறழ வைத்தா ரென்க.

இதுவு மொரு பொருள்.

இன்னு மிவ்வாறு விரிக்கிற் பெருகுமாதலா னமைக.

இனி, நாடிய பொருள் கைகூடுதற்குக் காரணங் கூறுகின்றார்.

நீடிய.....கூறுவோர்க்கே யென நீடிய வரக்க ரென்பது நீடிய வரத்தினையுடைய வரக்க ரென்ப தாம். வரத்தினிலுபே றுபசாரத்தா லதனை யுடை யார்மே லேற்றப்பட்டது.

* திருக்குறள்.

இதனு லவர் வரத்தின் பெருமை கூறியவாறு.

அரக்கர்சேனே, அரக்கரும் அவர்சேனேயுமெனப் பிரித்தெண்ணுக.

நீடிய வென்றதனு லரக்க ரென்றது இராவண னிந்திரசித்து முதலிய தலைவர்மே னின்றது. சேனே அவருடைய நால்வகைப் படையும்.

இனி, 'எள்ளது குப்பை' என்றது போல வரக்க ரது சேனேயென வொன்றன் கூட்டமாகிய தற்கிழ மைப் பொருள்பட வுரைத்தலு மொன்று.

நீறுபட்டு—நீருதலையுற்று; என்றது நெருப் பின் வெந்து நீருயதற்குப் பழைய பெயர் தோன்ருத வாறு போல விவரும் பின்ஞெருகாலத் துய்யுமா றின்றி யழிந்தே விட்டமை தோன்ற, நீறுபட வென் ருெழியாது நீறுபட்டொழிய வென்ருர்.

இனி, நீடிய வென்பதனைச் செய்யிய வென்னும் வினை யெச்சமாக்கிக் கடவுளர் நீடும்படியாக வரக்கர் சேனே நீறுபட்டொழிய வெனினுமாம்.

'மருந்து தின்ன நோய் தீர்ந்த' தென்ருற் போல, ஒழிய வென்றது காரண காரியப் பொருட்டா யிறந்த காலத்தின்கண் வந்து, சூடிய வென்னும் பெயரெச்ச வினை கொண்டது.

வெற்றியையும் வெற்றி கொண்டார் சூடும் வாகைத்தொடையையு முணர்த்திப் பல பொரு ளொரு சொல்லாய் நிற்கும் வாகை யென்பது சூடிய வென்னும் வினையா லீண்டு மாலையை யுணர்த் திற்று.

சூடியவென்னும் பெயரெச்சஞ் சிலையென்னும் பெயரொடு முடிந்ததென்க. எனவே அளவிலாற்ற லுடைய விராமன் றன்வலிக்கு நிகரில்லாத வரக்கரை வென்றதனாற் பெற்ற வாகையைத் தான் சூடுதலாற் பெருமித மின்மையிற் றன் சிலைக்குச் சூடினானென்ப தாயிற்று.

தோள்வலி தோளும் வலியு மெனப் பிரித் தெண்ணுக.

தோளென்றது சினையாகுபெயரான் முதலாகிய விராம விக்கிரகத்தின் மேனின்றது.

வலியாவது மிடல்.

இராம விக்கிரகத்தினை மனத்தாற் றியானஞ் செய்யினும் வாயான் வாழ்த்தினு மதுபற்றி யவர்கள் பாற் சயமடந்தை குடிகொண்டு வாழும்; வாழவே பகைவர் தருக்கற வென் றுலக முழுதுந் தம் மடிப் படுத்துப் பெருஞ்செல்வ மெய்துப வாகலிற், றோள் கூறுவார்க்கு நாடிய கல்விப்பொருள் கைகூடி ஞான முண்டாய் வீடுயர் நெறியதாக்கு மெனவும், வலி கூறுவோர்க்கு நாடிய செல்வப்பொருள் கைகூடிப் புகழுண்டாய் வேரியங் கமலை நோக்கு மெனவும் நிரனிறை வைத்துப்பொருள் கொள்க.

முப் பொறியுட் கூறுவோர்க்கென வாக்கின் றொழி லொன்றனையே கூறினர். நினைப்பினு மிறைஞ் சினுந் தமக்கே பயனும்; வாயாற் கூறுங்காற் றமக்கும் பிறர்க்கும் பயனுமாதலி னத் தலைமை பற்றி யென்க.

நிலைபெற்ற வரம்பெற்றிருந்துந் தனக்கு வணங்காத வரக்கர் நீறுபட்டொழியச் செய்தான்.

பரசுராமன் அரசர்குல மெல்லாம் மழுவானே துணித்து, வாகை முழுதும் மழுப்படையே பெறச் செய்தலி னவன்கரத் திருக்குங்காறும் வாகைபெறுது வறங்கூர்ந்த சிலை தனக்கு வணங்குதலா னது மேம்பட்டு வாகைசூடச் செய்தான். இவ்வாறு துட்ட நிக்கிரக சிட்டபரிபாலனஞ் செய்தலி னத்தன்மை யனுகிய விராமன் றேள்வலிகளைக் கூறுவோர்க்கு நாடிய பொருண் முதலிய விட்டப் பிராப்தியு மிவற்றி னெதிர்மறையாகிய வநிட்டநிவர்த்தியும் தாமே யெய்து மென்பது பெறப்படுதலின், நாடிய போருள் கைகூடும் ஞானமும் புகழுமுண்டாம்—வீடியர் வழிய தாக்கும் வேரியங்கமலை நோக்கு மென்றதற் கேற்ப, நீடிய வரக்கர்சேனை நீறுபட்டோழிய வாகை—சூடிய சிலையிராமன் றேள்வலி யென்ப தியையக் கிடந்த வாறு காண்க.

பகைவர் அமங்கல மெய்துதல் ஏனையோர்க்கு மங்கலமே யாதலின் அரக்கர்சேனை நீறுபட்டொழிய வென்ற லீண்டு மங்கலமேயா மென்க.

இனி நீடிய சூடிய என்பவற்றை வாழிய வென்பதுபோல வியங்கோளாக்கி, கைகூடும் உண்டாம் என்பனவற்றைச் செய்யுமென்னும் வாய்பாட்டுப் பெயரெச்சமாக்குக.

ஆக்கு, நோக்கு என்பனவற்றை முதனிலைத் தொழிற்பெயராக்கி, அங்ஙன நின்ற வும்மைகளை யெண்ணும்மையாக்கிப் பொருளென்பதனோடு மும்

மையைக்கூட்டி, சிலையிராமன் ஞேள்வலி கூறு வோர்க்கு, நாடப்படும் பொருளும் கைகூடுவதாகிய ஞானமும் புகழும் உண்டாவதாய் வீடுயர் வழிய தாக்கமும் வேரியங் கமலையது நோக்கமும் நீடுக; பகைவர் சேனை நீறுபட்டொழிய, வாகை சூடப்படுக என வாழ்த்தாகப் பொருளுரைத்தலு மொன்று.

இப்பொருட்கு அரக்கினை யுடையார் அரக்கர், அரக்காவது சிவப்பு. சிவப்பு—வெகுட்சி. வெகுட்சியினையுடையார் செறுநரெனப் *புத்திசேனனைத் திங்கள் விரவிய பெயரின னென்றாற்போற் கொள்க.

"செயப்படு பொருளைச் செய்தது போலத்
தொழிற் படக்கிளத்தலும் வழக்கியன் மரபே"

என்பவாகலிற் சூடுகவென்பது சூடப்படுக வெனப் பட்டது.

மழுப்படை அலப்படையுடைய விராமரி னீக்குதற்குச் சிலை யிராமனெனப் பிறிதினையைபு நீக்கிய விசேடணத்தான் விசேடிக்கப்பட்டது.

இனி, இத னகத்திலக்கணங்களை விரிக்கப்புகிற் பெருகும். பொருள் புறம், திணை பாடாண், மெய்ப்பாடு பெருமிதமும் வெகுளியும் உவகையும் வந்தவாறு காண்க.

அலங்காரங் காரணமாலை.

செய்யு ளாசிரிய விருத்தம்.

பொருள் கோள் விற்பூட்டு.

---

* புத்திசேனன் என்றது சீவகன் தோழர் நால்வருளொருவனெனச் சிந்தாமணியிற் கூறப்பட்டது.

வனையவுங் கண்டுகொள்க. ஈண்டுரைப்பிற் பெருகும்.

முத லிடை கடை யென்னு மூவகைக் காப்பியத்துள்ளு முத்தம காப்பியத்துக் கிலக்கணமாவது *"உள்ளுறைப்பொரு ணிலையலென்ப". இஃது முத்தம காப்பியத்தின் முதற்செய்யு ளாதலின் அதன் சொற்பொருளொழிய வுள்ளுறைப்பொருள் யாதெனிற் கூறுதும்.

கூறுவோர்க் கென்றதனுல் இராமன் றேள் வலியை யிக் கம்பராமாயண முளவாமெனக் காப்பியப்பயன் கூறியவா றிப்பாட்டின் கருத் தென்க.

இதனையே பாயிரத்துள் விளங்கக் கூறுப.

இங்ஙன மொருவாறு சுருக்கியுரைத்தாம்; இன்னும் விரிப்பிற் பெருகும்.

---

* தொல் காப்பியம்–சொல்–வினையியல்–சூ. 40.

சங்கோத்தர விருத்தி

முற்றிற்று.